15th November 1961 ]

* THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, எனக்கு இதிலே மிகுந்த திருப்தி. திருப்தி என்னவென்றால், எங்களுக்கு மகாத்மா காந்தி அடிகளிடத்திலே இல்லாத ஒரு மதிப்பு, கம்யூனிஸ்ட் அங்கத்தினருக்கு, கம்யூனிஸ்டு கட்சிக்கு இருக்கிறதே என்பதுதான். அப்படி மதிப்பு என்று சொல்லும்போது, அது வார்த்தைகளாலே மட்டும் இருந்தால் பயனில்லை. நடத்தையிலும் இருக்கவேண்டும். இப்போது மகாத்மா காந்தி அடிகளுக்கு மதிப்பு கொடுப்பது என்றால், அதை நடைமுறையிலே காட்ட வேண்டுமென்று சொன்னால், உழைப்பது தான் மதிப்பு கொடுப்பதாகும். உழைப்புக்குத்தான் வந்தனை செய்யவேண்டும். உண்மையிலேயே நாம் காந்தி அடிகளுக்கு மதிப்பு கொடுப்பதென்றால், பண்டிகை நாளில் சும்மா இருப்பதில் எவ்விதப் பிரயோஜனமும் இல்லை. அந்தப் பண்டிகையை மிகவும் சிறந்த முறையிலே கொண்டாட வேண்டும். அதைத்தான் இது குறிப்பிடுகிறது.

அடுத்தாற்போல், கனம் சின்னத்துரை அவர்கள் எதிர்பார்த்ததைப் போல் இதிலே நல்ல அம்சம் இருக்கிறது, தொழிலாளர்களுக்கான நலனளிக்கக்கூடிய ஒரு திருத்தத்தை அவர்கள் ஒப்புக்கொண்டதற்கு மிகவும் திருப்தியடைகிறேன். தொழிலாளர்கள ஆலோசனைக் குழுவிலே முக்கியமான பிரச்னைகள் விவாதிக்கப்படுகின்றது என்று சொன்னால், இந்த சட்டம் நிறைவேற்றும்போது சிற்சில பிரச்னைகள் இருக்கத்தான் செய்யும். அவைகள் எல்லாம் திருத்த வேண்டிய பிரச்னைகளாக இருக்கும். எல்லாவிதத் திருத்தங்களையும், விஷயங்களையும் ஆலோசனைக் குழுவிலே விவாதித்து நிறைவேற்றுவது என்பது சாத்தியமல்ல. இருந்தாலும் முக்கியமான பிரச்னைகள், அந்த தொழிலாளர் ஆலோசனைக் குழுவிலே கவனிக்கப்பட்டுத்தான் வருகிறது என்று சொல்லி, என்னுடைய வார்த்தைகளை முடித்துக் கொள்கிறேன்.

DEPUTY SPEAKER : The question is—

'That the Madras Industrial Establishments (National and Festival Holidays) (Amendment) Bill, 1961 (L.A. Bill No. 41 of 1961) be passed.'

The motion was put and carried and the Bill was passed.

## IV—ANNOUNCEMENTS.

### (1) THE MADRAS MINOR INAMS (ABOLITION AND CONVERSION INTO RYOTWARI) BILL, 1961

DEPUTY SPEAKER : I have to announce to the House that the Governor has given his recommendation for the consideration in the Legislative Assembly of the Madras Minor Inams (Abolition and Conversion into Ryotwari) Bill, 1961 (L.A. Bill No. 48 of 1961).